AL/2020/49/T-I(NEW)



(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය I
கிறிஸ்தவ நாகரிகம் I
Christian Civilization I

49 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1),(2),(3),(4),(5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** மொசப்பத்தேமிய நாகரிகம் எந்த நதிக்கரையோரத்தில் அமைந்துள்ளது?
(1) நைல் (2) யார்மூக் (3) ஜோர்தான்
(4) யூப்பிரடீஸ்-தைக்கிரீஸ் (5) சீரட்

**2.** முதன் முதலில் கிரேக்க மொழியில் எழுதப்பட்ட மூன்று பழைய ஏற்பாட்டு நூல்களாவன
(1) சாலமோனின் ஞானம், 1ஆம் மக்கபேயர், 2ஆம் மக்கபேயர்
(2) ரூத், யோபு, சபை உரையாளர்
(3) 1ஆம் குறிப்பேடுகள், 2ஆம் குறிப்பேடுகள், யோபு
(4) சபை உரையாளர், 1ஆம் மக்கபேயர், 2ஆம் மக்கபேயர்
(5) மீக்கா, 1ஆம் குறிப்பேடுகள், 2ஆம் குறிப்பேடுகள்

**3.** திருவிவிலியத்தின் இலத்தீன் மொழிபெயர்ப்பாகிய ‘வல்கேற்’றினை மொழிபெயர்ப்புச் செய்தவர் யார்?
(1) தேர்த்தூலியன் (2) ஜெரோம் (3) அலெக்சாந்திரியா சிறில்
(4) அகுஸ்தீன் (5) தோமஸ் அக்குவினஸ்

**4.** பபிலோனியரின் ஆட்சிக்கு பின்பும், கிரேக்கர்களின் ஆட்சிக்கு முன்பும் யூதர்கள் எந்நாட்டினரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தார்கள்?
(1) பிலிஸ்தியா (2) பினிசியா (3) உரோமை
(4) எகிப்து (5) பாரசீகம்



**5.** ஜோர்தான் ஆற்றின் கிழக்கு மலைப்பகுதியில் அமைந்துள்ள புவியியர் பிரிவுகள் எவை?
(1) பாசான், கிலியத், நெகேப் (2) பாசான், கிலியத், சமாரியா (3) ஏதோம், நெகெப், எஸ்ரலியோன்
(4) அமோன், மோவாப், ஏதோம் (5) சாரோன், மோவாப், அம்மோன்

**6.** கப்பர்நாகூமுக்கு மிக அண்மித்த நகரமானது
(1) திபேரியஸ் (2) பெத்சாய்தா (3) செசாரியா
(4) ஜெரிக்கோ (5) பீர்செபா

**7.** தாவீது அரசரின் காலத்தில் ஒன்றாக இணைந்திருந்த இஸ்ரயேல் நாடு, தாவீதின் மரபில் வந்த எந்த அரசரின் காலத்தில் பிளவுற்றது?
(1) சாலமோன் (2) ஜோசியா (3) ரெகபோவாம்
(4) ஜெரோபோவாம் (5) செதேக்கியா

**8.** மகா அலெக்சாந்தரின் மரணத்தின் பின்னர் பலஸ்தீனாவை கைப்பற்றியவர்கள் யாவர்?
(1) செலூத்தியர் (2) தொலமியர் (3) ஏரோதியர்
(4) பினிசியர் (5) அந்தியோக்கியர்

[பக். 2 ஐப் பார்க்க

**9.** உரோமை ஆட்சியாளருடன் நட்பினைப் பேணிய யூதக் குழுவினர்
(1) சதுசேயர் (2) பரிசேயர் (3) எசேனியர்
(4) செலுத்தியர் (5) மறைநூல் வல்லுநர்

**10.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - பாஸ்கா விழாவானது இஸ்ரலேயர் எகிப்திலிருந்து விடுதலை பெற்றதைக் கொண்டாடியதாகும்
B - ஆலய அர்ப்பண விழாவானது அடிமைத்தனத்திற்கு முற்பட்ட விழாவாகும்
C - கூடாரங்களின் விழா 'யோம் கிப்பூர்' என்று அழைக்கப்பட்டது
D - கூடாரங்களின் விழா செப்டம்பர் - ஒக்டோபர் காலப்பகுதியில் கொண்டாடப்பட்டது.
E - பெந்தகோஸ்து விழா வாரங்களின் விழாவென்றும் அழைக்கப்பட்டது.

மேற்குறித்தவற்றுள் இஸ்ரயேலரின் புராதன விழாக்கள் குறித்த சரியான கூற்றுக்களாவன
(1) A, B, C (2) A, D, E (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**11.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - சவுல் அரசன் யூதா கோத்திரத்தைச் சார்ந்தவன்
B - தாவீது அரசன் ஜெஸ்சேயின் மூத்த புதல்வன்
C - தாவீது அரசன் எருசலேமைத் தனது தலைநகராக்கினான்
D - ஆகாஸ் அரசன் தென் அரசினை ஆண்டான்.
E - இறைவாக்கினர் எசாயா ஆகாஸ் மன்னன் காலத்தில் வாழ்ந்தார்
மேற்குறித்தவற்றுள் புராதன இஸ்ரயேலிய அரசர்கள் குறித்த சரியான கூற்றுக்களாவன
(1) A, B, C (2) A, B, D (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**12.** கி.மு. 722 இல் வட அரசினைக் கைப்பற்றியவர்கள்
(1) அசீரியர்களாவர் (2) பபிலோனியராவர் (3) பாரசீகராவர்
(4) கிரேக்கராவர் (5) உரோமராவர்

**13.** பெரிய ஏரோது அரசனின் மரணத்தின் பின்பு கலிலேயாவை ஆட்சி செய்தவர்,
(1) பிலிப்பு (2) பிலாத்து (3) ஆர்க்கெலாஸ்
(4) ஏரோது அந்திப்பாஸ் (5) 1ஆம் ஏரோது அகிரிப்பா

**14.** "இறையாட்சி நெருங்கி வந்து விட்டது. மனம் மாறி நற்செய்தியை நம்புங்கள்" (மாற்: 1-15) இவ்வார்த்தைகளை இயேசு அறிவித்தது
(1) வரிதண்டுவோரைச் சந்தித்தவேளையில்
(2) நாசரேத்து தொழுகைக் கூடத்தில் போதித்தவேளையில்
(3) மலைப்பொழிவினை போதித்தவேளையில்
(4) பேதுருவை தம் சீடராக வருமாறு அழைத்தவேளையில்
(5) திருமுழுக்கின் பிற்பாடு ஜோர்தான் ஆற்றிலிருந்து வந்தவேளையில்



**15.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - பிறப்பிலிருந்து இயேசுவை அறிந்திருத்தல்
B - இயேசுவினாலே அழைக்கப்பட்டமை
C - யூத சட்டத்தினை அறிந்திருத்தல்
D - சிலுவையினை ஏற்றுக்கொண்டு இயேசுவைப் பின்தொடர தயாராதல்
E - நற்செய்தியினை அறிவிப்பதற்கான ஆற்றலைக் கொண்டிருத்தல்
மேற்குறித்தவற்றுள் இயேசுக்கிறிஸ்துவின் உலக வாழ்க்கையில் அவருடைய சீடராய் திகழ மிகப் பிரதானமான நிபந்தனைகளாவன
(1) A, B (2) A, D (3) B, D (4) C, D (5) C, E

**16.** மலைப்பொழிவில் இயேசுவினால் விதந்துரைக்கப்பட்ட மூன்று யூத நடைமுறைகளாவன முறையே,
(1) தருமம், இறைவேண்டல், நோன்பு
(2) இறைவேண்டல், நோன்பு, பரித்தியாகம்
(3) இறைவேண்டல், பரித்தியாகம், தருமம்
(4) நோன்பு, தவம், தருமம்
(5) தருமம், நோன்பு, பரித்தியாகம்

[பக். 3 ஐப் பார்க்க

**17.** இறையரசு குறித்த உவமைகள் யாவை?
(1) கடுகுமணி, நல்ல சமாரியன், புதையல், முத்து
(2) புதையல், முத்து, காணாமற்போன ஆடு, கடுகுமணி
(3) வலை, புதையல், காணாமற் போன நாணயம், முத்து
(4) கடுகுமணி, புதையல், முத்து, வலை
(5) முத்து, கடுகுமணி, ஊதாரி மகன், வலை

**18.** இறையரசிற்காக வாழ்ந்த மிக உயர்வான இயேசுவின் வாழ்வு, மிகச் சிறந்த முறையில் வெளிப்படுத்தப்படுவது, அவரது
(1) பிறப்பு, இறப்பு, உயிர்ப்பில் (2) பாடுகள், மரணம், உயிர்ப்பில்
(3) பிறப்பு, திருமுழுக்கு, மரணத்தில் (4) பாடுகள், பணிவாழ்வு, உயிர்ப்பில்
(5) பாடுகள், மரணம், விண்ணேற்றத்தில்

**19.** தொடக்கக் கிறிஸ்தவர்களின் நான்கு பிரதான செயற்பாடுகளாவன
(1) கற்பித்தல், ஒன்றாகக்கூடிவாழ்தல், புதுமைகள் புரிதல், அப்பம் பிட்குதல்
(2) திருத்தூதர் கற்பித்தவற்றைக் கேட்டல், ஒன்றாக வாழ்தல், அப்பம் பிட்குதல், இறைவேண்டலில் ஈடுபடல்
(3) கற்பித்தல், புதுமைகள் புரிதல், அப்பம் பிட்குதல், இறைவேண்டலில் ஈடுபடல்
(4) போதித்தல், கற்பித்தல், இறைவேண்டலில் ஈடுபடல், அப்பம் பிட்குதல்
(5) இறைவேண்டலில் ஈடுபடல், போதித்தல், ஒன்றாகக் கூடிவாழ்தல், அப்பம் பிட்குதல்

**20.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - கிரேக்க மொழிபேசும் யூத கிறிஸ்தவ கைம்பெண்களுக்கு பணியாற்ற தெரிவு செய்யப்பட்டனர்.
B - தூய ஆவியிலும், ஞானத்திலும் நிரப்பப்பட்டிருந்தார்கள்
C - எபிரேய மொழி பேசும் கிறிஸ்தவர்களுக்கு பணிபுரிய நியமிக்கப்பட்டிருந்தார்கள்.
D - நற்செய்தியினை அறிவிக்க திருத்தூதர்களால் தெரிவு செய்யப்பட்டிருந்தார்கள்
E - தொடக்கத் திருச்சபையின் உறுப்பினர்களிலிருந்து நன்மதிப்புப் பெற்ற எழுவர் தெரிவு செய்யப்பட்டார்கள்

மேற்குறித்தவற்றுள் திருத்தூதர் பணியின் திருத்தொண்டர்கள் குறித்த மிகச் சரியான கூற்றுகளாவன
(1) A, B, C (2) A, B, E (3) A, C, E (4) B, C, E (5) B, D, E

**21.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - இவர் ஒரு சைப்பிரஸ் நாட்டுக் குடிமகன்
B - இவர் ஒரு தெய்வபயம் மிக்க யூதர்
C - தமஸ்கு செல்லும் வழியில் இவரது மனமாற்றம் நிகழ்ந்தது
D - புனித மாற்கு இவரது சீடராவர்
E - தனது மறைபரப்பு பயணங்களை அந்தியோக்கியாவிலிருந்து ஆரம்பித்தார்.

மேற்குறித்தவற்றுள் புனித பவுல் குறித்த சரியான கூற்றுகளாவன
(1) A, B, C (2) A, C, D (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**22.** புனித பவுலின் அடிப்படை மறைபரப்பு முறைமைகளாவன
(1) மறைபரப்புப் பயணங்களும், நற்செய்தி எழுதுவதும்
(2) திருமுகங்கள் எழுதுவதும், யூதர்களுக்கு போதிப்பதும்
(3) மறைபரப்புப் பயணங்களும், திருமுகங்கள் எழுதுவதும்
(4) சமூகங்களை உருவாக்குவதும், புதுமைகள் புரிவதும்
(5) மறைபரப்புப் பயணங்களும், யூதர்களுக்கு போதிப்பதும்

**23.** புனித பவுலின் இரண்டாவது தூதுரைப் பயணத்தின்போது அவரோடு பங்கேற்ற மூன்று பிரதான நபர்கள்
(1) சீலா, திமோத்தேயு, லூக்கா (2) பர்னபா, லூக்கா, யாக்கோபு
(3) பேதுரு, பர்னபா, மாற்கு (4) பர்னபா, சீலா, லூக்கா
(5) யாக்கோபு, யோவான், பர்னபா

[பக். 4 ஐப் பார்க்க

**24.** திருச்சபையில் முதல் மூன்று நூற்றாண்டுகளும் வீரவரலாற்றுக் காலம் எனக்கொள்ளப்படுவதற்கான முக்கிய காரணம் யாது

(1) பத்திற்கும் அதிகமான உரோமைப் பேரரசர்களின் கலாபனைகளை எதிர்கொண்டமை
(2) உரோமைக் கலாபனைகளைத் தொடர்ந்து யூதக் கலாபனைகள் இடம் பெற்றமை.
(3) வழிபாடுகள் தடை செய்யப்பட்டுக் கிறிஸ்தவர்களின் உடமைகள் பறிமுதல் செய்யப்பட்டும் மக்கள் அஞ்சாமை
(4) பல கலாபனைகளுக்கு முகம் கொடுத்த போதும் பாதிக்கப்பட்டவர்களுக்கு தக்க விளக்கங்கள் அளிக்கப்பட்டமை
(5) பல கலாபனைகளுக்கு மத்தியிலும் திருச்சபை வேகமாகப் பரவியமை

கீழ்வரும் அட்டவணையில் A முதல் H வரை தரப்பட்டுள்ள யூத, உரோம கலாபனை சம்பந்தமான தகவல்களை அடிப்படையாகக் கொண்டு **25** ஆம் **26** ஆம் வினாக்களுக்கு விடை தருக.

| | |
|---|---|
| A - புனித பேதுரு சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டது | B - புனித செபஸ்தியாரின் மறைசாட்சிய மரணம் |
| C - கிறிஸ்தவர்கள் நாடு கடத்தப்பட்டது | D - பெண்கள் சிறைப்படுத்தப்பட்டது |
| E - புனித பீலிக்ஸின் மறை சாட்சிய மரணம் | F - கிறிஸ்தவர்களின் உடல்களுக்குக் கெந்தகம் பூசி எரியூட்டப்பட்டது |
| G - புனித பவுல் சிரச்சேதம் செய்யப்பட்டது | H - புனித தமியானின் மறை சாட்சி மரணம் |

**25.** மேற்குறித்தவற்றுள் பேரரசர் நீரோவுடன் தொடர்புடைய சோடிகளாவன

(1) A, B (2) A, G (3) C, H
(4) D, E (5) G, H

**26.** மேற்குறித்தவற்றுள் பேரரசர் டயக்கிளேசியனுடன் தொடர்புடைய சோடிகளாவன

(1) B, D (2) C, E (3) D, F
(4) E, G (5) E, H

**27.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - துருக்கியில் தமது பணியினை ஆற்றியவர்.
B - புனித பொலிக்காப்பின் சீடராவர்.
C - 'பேதக மறுப்பு' என்னும் நூலை எழுதினார்.
D - பேரரசர் டயக்கிளேசியன் காலத்தில் கொல்லப்பட்டார்.
E - 25 ஆண்டுகள் ஆயராகப் பணியாற்றினார்.

மேற்குறித்தவற்றுள் புனித இரேயுனிஸ் பற்றிய சரியான கூற்றுகளாவன

(1) A, B, C (2) A, D, E (3) B, C, D (4) B, C, E (5) B, D, E

**28.** பொதுச்சங்கங்களும் அவற்றில் விவாதிக்கப்பட்ட பேதகங்களும் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றுள் சரியான சோடியை இனங்காண்க

(1) எபேசு பொதுச் சங்கம் - நெஸ்தோரிய பேதகம்
(2) நிசேயா பொதுச் சங்கம் - இயுக்திக்கேய பேதகம்
(3) எருசலேம் பொதுச் சங்கம் - பெலாஜிய பேதகம்
(4) கொன்ஸ்தாந்திநோபிள் பொதுச் சங்கம் - ஆரிய பேதகம்
(5) கல்செடோன் பொதுச் சங்கம் - மசதோனிய பேதகம்

**29.** பின்வரும் நூல்களில் புனித அத்தனாசியாரால் எழுதப்பட்ட நூல் தொகுதியானது,

(1) படைப்பின் ஆறு நாட்கள், ஆரியரின் வரலாறு
(2) இறைவார்த்தை மனுவுருவாதல், ஆரியரின் வரலாறு
(3) புனித வனத்து அந்தோனியாரின் வரலாறு, தூய ஆவியானவர்
(4) படைப்பின் ஆறு நாட்கள், தூய ஆவியானவர்
(5) படைப்பின் ஆறு நாட்கள், இறைவார்த்தை மனுவுருவாதல்

[பக். 5 ஐப் பார்க்க

**30.** ஐரோப்பிய நாடுகளில் மறைப்பணியாற்றிய மறைப்பணியாளர்கள்
(1) புனிதர்களான பெரிய கிறகோரியார், பற்றிக், பக்கோமியஸ்.
(2) புனிதர்களான பொனிபாஸ், கொலம்பா, அத்தனாசியுஸ்.
(3) புனிதர்களான பெரிய கிறகோரியார், பொனிபாஸ், பிரான்சிஸ் சவேரியார்.
(4) புனிதர்களான கொலம்பா, பொனிபாஸ், பெரிய கிறகோரியார்.
(5) புனிதர்களான பிரான்சிஸ் சவேரியார், பற்றிக், பொனிபாஸ்.

**31.** திருச்சபை வரலாற்றில் 'மத்திய யுகம்' எனக் கணிக்கப்பட்ட காலமாகக் கொள்ளப்படுவது
(1) கி.பி 700 - 1200 வரை (2) கி.பி 800 - 1500 வரை (3) கி.பி 800 - 1700 வரை
(4) கி.பி 1200 - 1500 வரை (5) கி.பி 1300 - 1500வரை

**32.** 'தெய்வீக அன்பின் கழகம்' என்னும் துறவற சபையினை குருக்களுக்காக நிறுவியவர்,
(1) புனித லொயோலா இஞ்ஞாசியார் (2) புனித கயித்தான்
(3) புனித வின்சனட் தே பவுல் (4) புனித அவிலா திரேசா
(5) புனித சிலுவை யோவான்

**33.** இறையியலுக்கும் கிறிஸ்தவ மெய்யிலுக்கும் அதிக பங்களிப்புச் செய்துள்ள முக்கிய இரு புனிதர்கள்
(1) புனித ஹிப்போ அகுஸ்தீனார், புனித அன்சலம்
(2) புனித அன்சலம், புனித பொனவெந்தூர்
(3) புனித தோமஸ் அக்குவினஸ், புனித ஹிப்போ அகுஸ்தீனார்
(4) புனித தோமஸ் அக்குவினஸ், புனித அன்சலம்
(5) புனித பொனவெந்தூர், புனித அன்சலம்

**34.** புனித லொயோலா இஞ்ஞாசியார் "ஆன்மீகப் பயிற்சிகள்" என்னும் நூலை எழுதுவதற்குப் பயன்படுத்திய நூல்களாவன,
(1) புனிதர்களின் வாழ்க்கை, திரிதெந்து சங்கத்தின் மறைக்கல்வி.
(2) கிறிஸ்துவின் வாழ்க்கை நிறைவாழ்வின் வழி
(3) கிறிஸ்துவின் வாழ்க்கை கிறிஸ்து வழி வாழ்வு
(4) நிறைவாழ்வின் வழி, கிறிஸ்து வழி வாழ்வு
(5) கிறிஸ்துவின் வாழ்க்கை, புனிதர்களின் வாழ்க்கை

**35.** மத்திய யுகத்தில் திருச்சபை தலைவர்களுக்கும் அரச தலைவர்களுக்கும் இடையே முரண்பாடுகள் நிலவ முக்கிய காரணமாக அமைந்தது
(1) திருச்சபையின் தலைவர்கள் நாட்டுச் சட்டங்களை ஏற்க மறுத்தமை
(2) நாடுகள் தங்களுக்குள் போரிட்டுக் கொண்டமை
(3) நாட்டுத் தலைவர்கள் திருத்தந்தைக்குக் கீழ்ப்படிய மறுத்தமை
(4) திருச்சபையின் தலைவர்களின் ஆன்மீகத்தில் ஏற்பட்ட வீழ்ச்சி
(5) அரச தலைவர்கள் திருச்சபையை தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருக்க முயன்றமை.

**36.** கிரகோரியன் இசை என்பது
(1) தனி இசையாகும். (2) சேர்ந்திசையாகும். (3) விசேட சேர்ந்திசையாகும்.
(4) கலப்பு இசையாகும். (5) பொலிப்போனி இசையாகும்.

**37.** கீழ்வருபவற்றை கவனத்திற் கொள்க
(A) - செவ்வக வடிவம்
(B) - வளைந்த வடிவம்
(C) - அரை வட்டக் கூரை
(D) - கூரான முகப்பு
(E) - பூ வடிவிலான ஜன்னல்



மேற்குறித்தவற்றுள் கோதிக் கட்டடக் கலையினைக் குறிக்கும் சரியான அம்சங்களாவன
(1) A, D (2) A, E (3) B, E (4) C, D (5) D, E

**38.** 'தியானத்தில் புனித திரேசா' என்னும் சிற்பத்தைச் செதுக்கிய கலைஞர் யார்?
(1) டொனாரெல்லோ (2) லியனாடோ டா வின்சி
(3) மைக்கல் ஆஞ்சலோ (4) ஜியான் லொறன்ஸோ பர்மினி
(5) கியோற்றோ டீ போர்டேனே

**39.** மொசேயிக் சித்திரக்கலையினைக் **குறிக்காத** பண்பு
(1) சிறிய கண்ணாடித் துண்டுகளால் ஆக்கப்பட்டவை
(2) சிறிய பலகைகளில் மைப்பூச்சினால் வரையப்பட்டவை
(3) சித்திரங்கள் மிகுந்த கம்பீரத்தன்மை கொண்டவை
(4) சித்திரங்கள் கரடுமுரடான தன்மை கொண்டவை
(5) சித்திரங்கள் அழகுத் தன்மையினை பிரதிபலிப்பவை

**40.** நவீன விஞ்ஞான தொழில்நுட்ப கருவிகளை ஓவியங்களில் வரைந்த முன்னோடி ஓவியர்
(1) இறபாயல் சன்சியோ (2) பேட்டி செல்லி
(3) மைக்கல் ஆஞ்சலோ (4) பியாட்டோ டக்சியோ
(5) லியோனாடோ டா வின்சி

**41.** கீழ்வருபவற்றை கவனத்திற் கொள்க
A - இலத்தீன் வழிபாட்டு முறையினை பின்பற்றுதல்
B - மேற்கு சிரிய மரபோடு தொடர்பினைப் பேணுதல்
C - திருத்தந்தையின் நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளுதல்
D - சங்க அமைப்பு முறையினை ஏற்றுக் கொள்ளுதல்
E - வழிபாட்டில் திருப்பலிக்கு முக்கியத்துவம் கொடுத்தல்
மேற்குறித்தவற்றுள் இலத்தீன் மரபு திருச்சபை குறித்த மிகச் சரியான கூற்றுகளாவன
(1) A, B, C (2) A, C, D (3) A, C, E (4) B, C, D (5) C, D, E

**42.** ஜப்பானில் மறைபரப்புப் பணியாற்றிய முதற் துறவியர் குழுவினர்
(1) கார்மேல் சபையினர் (2) இயேசு சபையினர்
(3) பிரான்சிஸ்கன் சபையினர் (4) டொமினிக்கன் சபையினர்
(5) ஆசீர்வாதப்பர் சபையினர்

கீழ்வரும் அட்டவணையைப் பயன்படுத்தி **43 - 46** வரையிலான வினாக்களுக்கு விடை தருக.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>பென்சமின் ரபாய் | B<br>சிங்கள இலக்கண நூல் | C<br>சுவிசேச விரித்துரை | D<br>கிறிஸ்தவ சபைகளின் விவரணம் | E<br>சேனா சம்பத் |
| F<br>மத்தேயு நற்செய்தி சிங்களமொழியில் மொழி பெயர்க்கப்பட்டது | G<br>புத்தமுல | H<br>திருமுழுக்கு நீர் பாத்திரம் | I<br>ஞானப்பள்ளு | J<br>மூவிராசாக்கள் |
| K<br>வியாகுல பிரசங்கம் | L<br>பக்திப் பிரபோதன | M<br>ஞானர்த்த பிரதீபய | N<br>சந்தியோகு மையோர் அம்மானை | O<br>கிறிஸ்து பிறப்பு (கயமவிம) |

**43.** யாக்கோமே கொன்சால்வேஸ் அடிகளாருடன் தொடர்புடைய சோடி
(1) B, G (2) C, K (3) D, I (4) H, M (5) I, L

**44.** காலனித்துவ ஆட்சிக்கு முற்பட்ட காலத்துடன் தொடர்புடைய சோடி
(1) A, C (2) B, F (3) D, H (4) E, I (5) J, O

**45.** போர்த்துக்கேயர் கால இலக்கியங்களுடன் தொடர்புடைய சோடி
(1) B, I (2) B, L (3) C, I (4) D, O (5) K, M

**46.** ஆயர் எட்மன் பீரிஸ் ஆண்டகையுடன் தொடர்புடைய சோடி
(1) B, F (2) F, C (3) F, L (4) G, L (5) M, O

**47.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - உலக மிசனரி மாநாடு
B - கிறிஸ்தவ வாலிபர் சங்கம்
C - நம்பிக்கை ஒழுங்குக்குமான இயக்கம்
D - வாழ்வும் பணிக்குமான இயக்கம்
E - நீதி, அமைதி, படைப்புக்கான ஆணைக்குழு

மேற்குறித்தவற்றுள் உலக கிறிஸ்தவ சம்மேளனம் (WCC) உருவாக வித்திட்ட அமைப்புகளாவன

(1) A, C, D (2) A, C, E (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**48.** ஆசிய கிறிஸ்தவ சம்மேளனம் (A C C) உருவாக்கப்பட்டது

(1) அவுஸ்ரேலியாவில் (2) இலங்கையில் (3) இந்தோனேசியாவில்
(4) பிலிப்பைன்ஸில் (5) தென் கொரியாவில்

**49.** 'பல்சமய உறவு' பற்றிய 2 ஆம் வத்திக்கான் சங்கப் படிப்பினை **அல்லாதது**

(1) ஒவ்வொருவரினதும் சமய சுதந்திரம் மதிக்கப்படல் வேண்டும்
(2) அனைத்து சமயங்களும் சரிசமமென கொள்ளல் வேண்டும்
(3) பிறசமயங்கள் மரபுகள் மீதான மதிப்பினை வளர்த்தல் வேண்டும்
(4) பிற சமயங்களின் அருள் வரங்களைக் கண்டு பாதுகாத்தல் வேண்டும்
(5) அனைவரும் ஒன்றாய் ஆன்மிக திருப்பயணம் மேற்கொள்ளல் வேண்டும்

**50.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - மறைக்கோட்பாடுகள்
B - அருட்சாதனங்கள்
C - மீட்பு வாழ்வு
D - பாஸ்கா மறைபொருள்
E - வழிபாட்டு முறைகள்

மேற்குறித்தவற்றுள் திருச்சபைகளின் பிளவுகளுக்கான பிரதான காரணிகளாவன

(1) A, B, C (2) A, B, E (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

* * *

(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය II
கிறிஸ்தவ நாகரிகம் II
Christian Civilization II

49 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

※ **பகுதி I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் **பகுதி II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (i) போர்த்துக்கேயரால் இலங்கையில் மேடையேற்றப்பட்ட நாடகங்கள் **நான்கினைப்** பட்டியலிடுக. (2 புள்ளிகள்)

(ii) இலங்கையில் பணியாற்றிய **இரண்டு** கிறிஸ்தவக் கல்வியியலாளர்கள் **இருவரின்** பங்களிப்பினை சுருக்கமாக விபரிக்குக (4 புள்ளிகள்)

(iii) போர்த்துக்கேயர் காலத்தில் இலங்கையில் பணியாற்றிய பிரான்சிஸ்கன் சபை மறைபரப்பாளர்களால் நிர்வகிக்கப்பட்ட பாடசாலைகளின் வகைகளை விபரிக்குக. (6 புள்ளிகள்)

(iv) இலங்கையில் சுதந்திரத்திற்கு பின்னரான காலப்பகுதியில் கிறிஸ்தவர்களால் ஆற்றப்பட்ட **இரண்டு** சமூகப் பணிகள் குறித்துக் கலந்துரையாடுக. (8 புள்ளிகள்)

**2.** (i) பேதகங்களினால் திருச்சபைக்கு ஏற்பட்ட நன்மைகள் **நான்கினைக்** குறிப்பிடுக. (2 புள்ளிகள்)

(ii) சிலுவைப்போர் இயக்கத்திற்கு வித்திட்ட காரணிகள் **நான்கினைக்** குறிப்பிடுக. (4 புள்ளிகள்)

(iii) புனித சிலுவை யோவான் கிறிஸ்தவ ஆன்மீகத்திற்கு ஆற்றிய பங்களிப்பினை கலந்துரையாடுக. (6 புள்ளிகள்)

(iv) முதல் ஐந்து நூற்றாண்டுகளில் திருச்சபையின் உலகளாவிய பண்பினை வெளிப்படுத்திய வரலாற்று நிகழ்வுகள் **நான்கினைக்** கலந்துரையாடுக. (8 புள்ளிகள்)

**3.** (i) தொடக்கக் கிறிஸ்தவ குழுமத்தின் பண்புகள் **நான்கினைப்** பெயரிடுக (2 புள்ளிகள்)

(ii) புனித பேதுருவின் முதல் மறையுரையில் காணப்படும் அடிப்படைக் கருத்துக்களைக் குறிப்பிடுக. (4 புள்ளிகள்)

(iii) 'தூய ஆவியில் வாழ்வு' குறித்த புனித பவுலின் போதனையை விளக்குக. (6 புள்ளிகள்)

(iv) கிறிஸ்தவ மேம்பாட்டிற்கு கிரேக்க-உரோம நாகரிகங்கள் ஆற்றிய பங்களிப்பினைக் குறித்துக் கலந்துரையாடுக. (8 புள்ளிகள்)

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

**4.** (i) கி.பி. முதலாம் நூற்றாண்டில் பலஸ்தீன சமூகத்தினால் புறந்தள்ளி வைக்கப்பட்டவர்களான பாவிகள், வரிதண்டுவோர், சமாரியர் மட்டில் இயேசுவின் மனநிலையை விளக்குக.

(ii) இன்றைய சமூகத்திற்கு 'சீடத்துவம்' பற்றிய இயேசுவின் படிப்பினைகள் எவ்வாறு பொருத்தப்பாடாயுள்ளன என்பது பற்றி கருத்துரை வழங்குக.

(10 × 2 = 20 புள்ளிகள்)

**5.** (i) கிறிஸ்தவத்தின் பரம்பலுக்கு புனித பவுலின் தூதுரைப் பயணங்களும், திருமுகங்களும் முக்கிய கருவிகளாய் விளங்கின என்பது பற்றிக் கலந்துரையாடுக.

(ii) இலங்கைத் திருச்சபைகள் எவ்வாறு 'கொவிட் 19' நிலைமைக்கு பதில்கொடுத்து விசுவாசிகளின் நம்பிக்கையினை மேம்படுத்துவதற்கு உதவின என்பதனை மதிப்பீடு செய்க.

(10 × 2 = 20 புள்ளிகள்)

**6.** (i) மிலான் சாசனத்தின் சாதக பாதக விளைவுகளை விபரிக்குக.

(ii) " நாட்டின் முழுமையான அபிவிருத்திக்கு பல்லின சமயங்கள், இனக்குழுக்கள் மத்தியிலான ஒத்துழைப்பு பெரிய வளமாகும்" இக் கூற்றினை விளக்குக

(10 × 2 = 20 புள்ளிகள்)

**7.** (i) கப்புச்சியன் துறவிகளின் வாழ்வில் காணப்படும் சிறப்பான பண்புகளை விபரிக்குக.

(ii) பொது நிலையினரின் முழுமையான வளர்ச்சிக்கு குருக்கள், துறவிகள் எவ்வாறு பங்களிப்புச் செய்யலாம் என்பதனை தெளிவுபடுத்துக.

(10 × 2 = 20 புள்ளிகள்)

**8.** (i) இலங்கையில் ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் எத்தகைய வளர்ச்சியடைந்த ஒரு கல்வி முறைமை காணப்பட்டது எவ்வாறு என்பதனை விளக்குக.

(ii) ஒல்லாந்த மறைபரப்பாளர்களின் நன்கு வளர்ச்சியடைந்த கல்வி முறைமையினால் இலங்கையில் கிறிஸ்தவம் எவ்வாறு பரவியது. இந்தக் கூற்றினை நியாயப்படுத்துக. (10 × 2 = 20 புள்ளிகள்)

❋ ❋ ❋